# இயலிசை

தனிப்பிரதி விலை ரூபாய் ஒன்று

| | |
|---|---|
| ஆண்டு சந்தா | ரூ. 10 |
| அரையாண்டு சந்தா | ரூ. 5 |

சிறப்பாசிரியர்:
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர்:
K.P. இளங்கோவன்

''இயலிசை''
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம் சென்னை-24.

மலர் 3 15—12—84 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை — இசை விழா சிறப்பிதழ் இதழ் 13-16


## உமையாள்புரம் கண்ட உயர்ந்த கலைஞர்

கலை வளர்த்த தஞ்சை மாவட்டத்தில் நடுநாயகமான ஊர் கும்பகோணம். அங்கிருந்து திருவையாறு செல்லும் வழியில் உள்ளது நீர்வளமிக்க உமையாள்புரம். இவ்வூரைச் சார்ந்த டாக்டர் காசிவிசுவநாதன் அவர்களுக்கு கும்பகோணத்தில் 1935ல் உமையாள்புரம் K. சிவராமன் மகனாகப் பிறந்தார். டாக்டர் தனது மகனை B.A.B.L. படிக்க வைத்து வழக்குக் கச்சேரிக்கு அனுப்ப நினைத்தார். மகனோ தனது 10 வயது முதல் மிருதங்கக் கலையிலும் ஆர்வம் காட்டி சங்கீத கச்சேரிக்கு வந்துவிட்டார்.

தஞ்சாவூர் வைத்தியனாத அய்யர் பாலக்காடு மணிஅய்யர் மற்றும் பலரிடம் பயின்ற இவர் சென்ற தலைமுறை, இன்றைய தலைமுறை பெரும் இசைக் கலைஞர்கள் அனைவருக்கும் அரிய இசை சபைகளிலும் வாசித்துள்ளார். 25 வருடங்களாக வானொலியில் உயர்தர கலைஞராகப் பங்கேற்று வாசித்து வருகின்றார். கிட்டத்தட்ட 12 இசைத் தட்டுகளில் மிருதங்கம் வாசித்துள்ளார். அவற்றில் அமெரிக்காவில் இருந்து வெளிவந்த 'டிரம்ஸ் ஆப் இந்தியா' இசைத்தட்டு குறிப்பிடத் தக்கது. வடநாட்டு கலைஞர்களுடன் சேர்ந்து 'ஜுகல் பந்தி' இசை நிகழ்ச்சிகளிலும் வாசித்துள்ளார்.

தமிழக அரசின் 'கலைமாமணி' 'மிருதங்க நாதமணி' மற்றும் பல பட்டங்கள் பெற்று 1981 முதல் தமிழக அரசவைக் கலைஞராக இருந்து வருகின்றார். மிருதங்கக் கலை ஆராய்ச்சியாளராகவும், விரிவுரையாளராகவும் இருக்கின்றார். ரஷியா அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து, பல ஐரோப்பிய நாடுகள் மற்றும் சிங்கப்பூர், மலேசியா நாடுகளுக்கு சென்று 20 நிகழ்ச்சிகளில் பங்குகொண்டுள்ளார்.

இவரது புகழையும், நாதமான வாசிப்பையும் அறிந்து 'மிருதங்க சக்ரவர்த்தி' என்ற திரைப்படத்தில் வாசிக்க அழைத்தனர். இப்படம்மூலம் இவர் புகழ் மேலும் வளர்ந்துள்ளது. இவ்வருட இண்டியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைடி இசை மாநாட்டிற்கு இவர் தலைமை வகிக்கின்றார்.

## லால்குடியின் லலித கானம்



இவ்வருடம் நடைபெறும் தமிழிசைச் சங்க இசை விழாவிற்கு தலைமைவகித்து 'இசைப் பேரறிஞர்' விருது பெறுகின்றார் வயலின் மேதை லால்குடி G. ஜெயராமன், தியாகராஜா சுவாமிகள் நேரடி சீடரான லால்குடி ராமஅய்யரின் வழிவந்தவர். 1930-ல் வித்வான் லால்குடி V. R. கோபால் அய்யருக்கு மகனாகப் பிறந்து சிறுவயது முதல் கலையில் ஆர்வம் கொண்டார். 12 வயது முதல் வயலின் வாசிக்க ஆரம்பித்தார். பரம்பரை ஞானம், கடின உழைப்பு, நாதமான வாசிப்பு இவற்றால் வேகமாக முன்னேற்றமடைந்த இவர் பெருங்கலைஞர்கள் அனைவருக்கும் துணைக் கருவியாளராக வாசித்தார்.

கலைஞர்களும் இவரது துணையான வாசிப்பை விரும்பினர்.

பின்னர் 1958 முதல் தனக்கென்று ஓர் பாணியை ஏற்படுத்திக் கொண்டு தனி Solo கச்சேரிகளும் செய்ய ஆரம்பித்தார். ஏரான தில்லானாக்கள் வர்ணங்களை அமைத்து வாசித்துள்ளார். இவர் வாசித்த இசைத்தட்டுகளும் ஏராளமாக உள்ளன.

இந்தியா முழுவதும் கச்சேரிகள் செய்த இவருக்கு 1965-ல் இங்கிலாந்தில் எடின்பரோ உலக விழாவில் வாசிக்கும் அழைப்பு வந்தது. இவரது வாசிப்பைக் கேட்ட இசை மேதை யகுதிமேனுஹின் பரிசளித்து பாராட்டினார். தொடர்ந்து இவர் அமெரிக்கா கனடா, ரஷியா, ஐரோப்பிய நாடுகளுக்கும், மலேசியா, சிங்கப்பூர் போன்ற கீழை நாடுகளுக்கும் சென்று நிகழ்ச்சிகள் நடத்தியுள்ளார். நியூயார்க்கில் நடந்த இசை மாநாட்டில 'நாத வித்யா ரத்னாகர' என்ற பட்டம் பெற்றார். இவருடன் இவரது மகன் G. J. R. கிருஷ்ணனும் உடன் வயலின் வாசிக்கின்றார்.

இவருக்கு இந்திய அரசு 'பத்மஸ்ரீ' விருதும் சங்கீத நாடக அகடமி விருதும் வழங்கியுள்ளது. சென்னை இசைச் சபைகள் 'சங்கீத சூடாமணி' விருது அளித்துள்ளது.

தமிழக அரசு தனது அரசவைக்கலைஞராக 1979-முதல் இவரை நியமித்துள்ளது.

## தேர்தலும் தலைநகர் கலை விழாவும்

சென்னை மாநகரம் டிசம்பர் மாத இசை விழாவினை ரசிக்க தயாராகிக் கொண்டு இருக்கும் நேரத்தில் திடீர் பொதுத் தேர்தல் அறிவிப்பு வந்து இசை விழா ஏற்பாடுகள், செய்திகள் பாதிக்கப்பட்டன. என்றாலும் கடந்த ஆண்டுகளுக்கு எந்த குறைவுமின்றி இசைச்சபைகள் இவ்வருட விழாவினையும் ஏற்பாடு செய்துள்ளன. தனியே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் படி தலைநகரில் இசை விழா 15-12-84 முதல் 2-1-85 வரை நடைபெறுகின்றது. இவ்வருடம் வீணை, துணைக்கருவியாளர்களே இசை மாநாடுகளுக்கு தலைமை வசித்து விருதுகள் பெறுகின்றனர். இசையாராய்ச்சி அரங்கங்கள் மியூசிக் அகடமி, இண்டியன் பைன் ஆர்ட் இவற்றில் தினசரியும், தமிழிசைச் சங்கத்தில் 22-12-84 முதல் 4 நாட்களும், கிருஷ்ண கானசபையில் 16-12-84 முதல் 24-12-84 வரையும் நடைபெறுகின்றது.

இசை விழா தேர்தலோடு வருவதால் இவ்வருடம் விழாவில் கலைஉலக அரசியலும் அதிகமாகத்தான் இருக்கின்றது. கூட்டணியும் இருக்கின்றது. சில பிரபல கலைஞர்கள் திடீரென்று பல சபைகளால் புறக்கணிப்பட்டிருப்பதையும், குறிப்பிட்ட சில கலைஞர்களே எல்லா இடங்களிலும் வாய்ப்புகள் பெற்று பாடுவதனையும் காண்கின்றோம்.

இசை விழா இனிது நடைபெற்று கலை வளர வாழ்த்துக்கள்! விருது பெரும் வித்தகர்களுக்கும் வாழ்த்துக்கள்!

—ஆசிரியர்

## மைசூர் வீணை வித்தகர்!



கர்நாடக மாநிலத்தில் மைசூரில் வாழ்ந்த புல்லாங்குழல் கலைஞர் வெங்கடேச அய்யங்காருக்கு 1920-ல் மகனாகப் பிறந்தவர் டாக்டர் V. துரைசாமி அய்யங்கார். சிறு வயது முதலே வீணை வாசிப்பதில் ஆர்வமாக இருந்த இவரை மைசூர் அரசவையில் கலைஞனாக இருந்த வெங்கடகிரியப்பா என்பவர் தனது மாணவனாக ஏற்றுக்கொண்டார். இவரது 12 வயது பருவத்திலேயே மைசூர் அரசர் சபையில் வீணை அரங்கேற்றம் செய்ய வைத்தார். அரசர் மகிழ்ந்து ஆசியளித்தார்.

பின்னர் துரைசாமி அய்யங்கார் தனது குருநாதர் வெங்கடகிரியப்பாவுடன் சேர்ந்து ஏராள வீணை நிகழ்ச்சிகள் நடத்தினார். இவரைவிட பெரியவரான வயலின் மேதை சௌடய்யா அவர்களும் இவருடன் சேர்ந்து கச்சேரிகள் செய்தார். இந்தியா முழுவதும் இவர் கச்சேரிகள் செய்துள்ளார்.

வானொலியில் கர்நாடக இசை தயாரிப்பாளராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றார். வீணை கச்சேரியில் 50 வருட அனுபவம் உள்ள இவர் இவ்வருட மியூசிக் அகடமி இசை மாநாட்டிற்கு தலைமை வகித்து 'சங்கீத கலாநிதி' விருது பெறுகின்றார்.

# தி இண்டியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி

சென்னை-108

## 52வது தென்னிந்திய இசை மாநாடும், கலை விழாவும்

இடம்: சுவாமி சங்கரதாஸ் கலையரங்கம், அபிபுல்லா சாலை' தி. நகர்.

### 20-12-84

மாலை 4-00 G. எத்திராஜன் குழுவினர்—நாதசுரம்.
6-00 விழாத்துவக்கம்: புதுடில்லி சங்கீத நாடக சங்கத்தலைவர், டாக்டர் V.K. **நாராயண மேனன்** விழா தலைவர்: மிருதங்கக்கலைஞர் **உமையாள் புரம் K. சிவராமன்.**
7-00 ரம்யா சீனிவாசன்—பரதநாட்டியம். (சுவாமிமாலை S. K. ராஜரத்னம் மாணவி)

### 21-12-84

2-00 S. சுந்தர் குழுவினர்.
3-45 சுந்தரம் கிருஷ்ணன் குழுவினர்.
6-00 ஸ்ரீரங்கம் கோபாலரத்னம் குழுவினர்.
9-00 மாலதி டாம்னிக்—நடனம். (K. P. கிட்டப்பா பிள்ளை மாணவி)

### 22-12-84

2-00 போகளம் N. காசிராஜன் குழுவினர்.
3-45 சுமதி நாராயணன் குழுவினர்.
6-00 பத்மா சுப்ரமணியம்—நடனம்.
9-00 மணக்கால் ரங்கராஜன்—குழுவினர்.

### 23-12-84

2-00 V. பிருந்தா குழுவினர்.
3-45 சுகுமாரி நரேந்திரமேனன் குழுவினர்.
6-00 T. V. சங்கரநாராயணன் குழுவினர்.
9-00 மாஸ்டர் U. ஸ்ரீனிவாசு மாண்டலின் குழுவினர்.

### 24-12-84

2-00 M. V. உஷா குழுவினர்.
3-45 பூஷணி கல்யாணராமன் குழுவினர்.
6-00 டாக்டர் S. இராமநாதன் குழுவினர்.
9-00 R. பிச்சுமணி வீணை.

### 25-12-84

2-00 ஜெயந்தி ஸ்ரீதரன் குழுவினர்.
3-45 உஷாலட்சுமி கிருஷ்ணமூர்த்தி குழுவினர்.
6-00 K. J. ஜேசுதாஸ் குழுவினர்.
9-00 மஞ்சுளா நரசிம்மன் நடனம். (சுதாராணி ரகுபதி மாணவி)

### 26-12-84

2-00 K. S. விஜயஸ்ரீ குழுவினர்.
3-45 உமா கீதா சகோதரிகள் குழுவினர்.
6-00 திருச்சூர் V. இராமச்சந்திரன் குழுவினர்.
9-00 வைரமங்கலம் S. லட்சுமிநாராயணன் குழுவினர்

### 27-12-84

2-00 கும்பகோணம் V. S. சங்கர் குழுவினர்.
3-45 விஸ்வநாத பரசுராமன் குழுவினர்.
6-00 S. பாலச்சந்தர்—வீணை.
9-00 உமா சுப்ரமணியம்—நடனம். (அடையாறு K. லட்சுமணன் மாணவி)

### 28-12-84

2-00 M. மோகன் குழுவினர்.
3-45 சியாமளா வெங்கடேசுவரன் குழுவினர்.
6-00 D. K. ஜெயராமன் குழுவினர்.
9-00 N. C. சௌந்தரவல்லி குழுவினர்.

### 29-12-84

2-00 சாந்தா இராமநாதன் குழுவினர்.
3-45 உமா கோபால்சாமி குழுவினர்.
6-00 லட்சுமி விசுவநாதன்—நடனம்.
9-00 மதுரை கிருஷ்ணன் குழுவினர்.

### 30-12-84

2-00 லோகா V. சங்கர்—புல்லாங்குழல்.
3-45 O. S. தியாகராஜன் குழுவினர்.
6-00 மதுரை T. N. சேஷகோபாலன் குழுவினர்.
9-00 N. கேசி—புல்லாங்குழல்.

### 31-12-84

2-00 நிர்மலா ஜானகிராமன்—வீணை.
3-45 சாந்தாராவ்—வீணை.
6-00 மகாராஜபுரம் சந்தானம் குழுவினர்.
9-00 ரஞ்சனி இராமகிருஷ்ணா—நடனம். (யாமினி கிருஷ்ணமூர்த்தி மாணவி)

### 1-1-85

6-00 'கும்ப கர்ணன்' நாடகம்.



# தமிழ் இசைச் சங்கம்

ராஜா அண்ணாமலை மன்றம்

சென்னை-108.

42 - வது ஆண்டு

தமிழிசை விழா

84 டிசம்பர்

## 21-12-84

மாலை 4-00 திருவிடை மருதூர் P.S.V. ராஜா – நாதசுரம்
திருவொற்றியூர் A. பாலசுந்தரம்—தவில்

6-00 விழாத்துவக்கம் : **மேதகு ஆளுநர் S.L. குராறு**
விழாத்தலைவர் : **லால்குடி G ஜெயராமன்**

6-45 டாக்டர், சீர்காழி கோவிந்தராஜன் குழுவினர்.

இரவு 9-30 திருவிழா R. ஜெய்சங்கர் – நாதசுரம்
மன்னார்குடி M.N. ராஜகோபால் பிள்ளை
வலையப்பட்டி A R. சுப்பிரமணியம் – தவில்

## 22-12-84

மாலை 2-30 திருக்களர் T. சுப்பையா தேசிகர், காஞ்சிபுரம்
A. விநாயக முதலியார்—தேவாரம்

4-00 V. சோமசுந்தரம் – தேவாரம்.

6-00 லால்குடி ஜெயராமன் G.J.R. கிருஷ்ணன் – வயலின்.

இரவு 9-30 சிக்கில் சகோதரிகள் —புல்லாங்குழல்.

## 23-12-84

மாலை 2-30 மகளிர் நாலாயிரத் திவ்விய பிரபந்த இசை.

4-00 மகளிர் தேவார இசை அரங்கம்.

6-00 மகாராஜபுரம் சந்தானம் குழுவினர்.

இரவு 9-30 குன்னக்குடி R. வைத்தியநாதன் – வயலின்.

## 24-12-84

மாலை 2-30 S. நமச்சிவாய ஓதுவார், A. வேலாயுத ஓதுவார் —திருப்புகழ் இசை.

4-00 லால்குடி M, சுவாமிநாதன் குழுவினர் தேவார இசை.

6-00 டாக்டர் M.L. வசந்தகுமாரி குழுவினர்.

இரவு 9-30 செல்வி சோபா நடராஜன்—பரத நாட்டியம்.

## 25-12-84

மாலை 2-30 திருவாவடுதுறை D. சோமசுந்தரம் தேசிகர் குழுவினர்—தேவாரம்,

4-00 தர்மபுரம் P. சுவாமிநாதன் குழுவினர்— தேவாரம்.

6-00 குமாரி சுவர்ணமுகி—பரதநாட்டியம்.

இரவு 9-30 சேக்சின்ன மவுலானா S. காசிம்— நாதசுரம்.
வலங்கைமான் A. சண்முகசுந்தரம்—தவில்.

## 26-12-84

மாலை 4-00 செல்விகள் அபர்ணா, சரண்யா—பரத நாட்டியம்.

6-00 K.J. ஜேசுதாஸ் குழுவினர்.

இரவு 9-30 சிறுவன் U. சீனிவாசு--மேண்டலின்.

## 27-12-84

மாலை 2-30 செல்விகள் அனுராதா, சுபாஷினி— பரத நாட்டியம்.

4-00 செல்வி M. பிரமீளா—குழுவினர்.

6-00 T.N. சேஷகோபாலன் – குழுவினர்.

இரவு 9-30 A.P. கோமளா—குழுவினர்.

## 28-12-84

மாலை 2-30 செல்வி ஜெயந்தி ராமானுஜம்—பரதநாட்டியம்

4-00 செல்வி ஸ்ரீநிதி ரங்கராஜன்—பரதநாட்டியம்.

6-00 திருமதி சித்ராவிஸ்வேஸ்வரன்—பரதநாட்டியம்

இரவு 9-30 R. பிச்சுமணி குழுவினர்—வீணை.

## 29-12-84

மாலை 4-00 செல்வி மஞ்சுளா நரசிம்மன் —பரதநாட்டியம்.

6-00 கும்பகர்ணன்—நாடகம் R.S. மனோகர்.

இரவு 9-30 திருச்சூர் V. ராமச்சந்திரன் —குழுவினர்.

## 30-12-84

மாலை 2-30 திருமதி சுகன்யா புருஷோத்தமன் —குழுவினர்.

4-00 திருமதி சாந்திராவ்—வீணை

6-00 டாக்டர் செல்வி பத்மா சுப்ரமண்யம்—பரத நாட்டியம்.

இரவு 9-30 திருமதி S. ராஜேஸ்வரி குழுவினர்.

## 31-12-83

மாலை 2-30 திருமதி ராஜஸ்ரீ கௌதம்—பரதநாட்டியம்.

4-00 செல்வி ரம்யா சீனிவாசன்—பரதநாட்டியம்.

6-00 டாக்டர் மதுரை S. சோமசுந்தரம்—குழுவினர்.

இரவு 9-30 திருமதி மணி கிருஷ்ணசாமி—குழுவினர்.

## 1-1-85

காலை 10-00 புலவர் கீரன் – கதை அரங்கம்.

மாலை 2-30 S. சுந்தர்—வீணை.

4-00 M.K.S. சிவா, M.K.S. நடராஜன் – நாதசுரம்.

6-30 திருமதி ஹேமமாலினி – பரதநாட்டியம்.

இரவு 9-00 நாமகிரிப்பேட்டை K, கிருஷ்ணன்—நாதசுரம்.
அரித்துவார மங்கலம் A.K. பழனிவேல்,
திருவாளபுத்தூர் T.A. கலியமூர்த்தி—தவில்.

# திருவையாறு இசை விழாக்கள்

**வருடந்தோறும் நடைபெறும் திருவையாறு தியாகப்ரம்ம ஆராதனை இசைவிழாவினை இவ்வருடம் 1985 ஜனவரி 8 முதல் 12 வரை 5 நாட்கள் ஸ்ரீ தியாகபிரம்ம மகோத்சவ சபையினர் தியாகராஜர் சமாதியருகில் நடத்துகின்றனர். பிரபலமான மேளக்காரர்கள் இசைவாணர்கள் உட்பட பலர் கலந்து தியாகராஜர் கீர்த்தனங்களைப்பாடுவர்.**

**திருவையாறு தமிழிசை மன்ற இசை விழா ஜனவரி, 14, 15, 16 தேதிகளில் அரசினர் கலைக்கல்லூரி திடலில் நடத்துகின்றனர். இதில் பல தமிழிசை வாணர்கள் கலந்து தமிழிசை வழங்குவர்.**

# மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப்

16, ஆலிவர் சாலை, சென்னை-4.

## 33-வது ஆண்டு கலை விழா



| | | |
|---|---|---|
| | | 20-12-84 |
| மாலை | 6-00 | துவக்கம் : கேரள ஆளுநர் மேதகு **பா. இராமச்சந்திரன்.** |
| | | தலைமை : நீதிபதி மாண்புமிகு **S. மோகன்.** டாக்டர் **M. A. M. இராமசாமி** அவர்கள் விழா மலரினை வெளியிடுவார் சங்கீத கலா நிபுண என்ற விருதினை **பேராசிரியர் T. N. கிருஷ்ணன்** அவர்களுக்கு வழங்குவர். |
| இரவு | | சுபாஷிணி ஸ்ரீராம்—பரதநாட்டியம் (K. J. சரசா மாணவி) |
| | | 21-12-84 |
| மாலை | 6-00 | வோலட்டி வெங்கடேஸ்வரலு குழுவினர். |
| | | 22-12-84 |
| மாலை | 3-30 | R. சுந்தர் குழுவினர். |
| | 6-00 | சிட்டிபாபு வீணை. |
| | | 23-12-84 |
| காலை | 9-00 | திருச்சூர் V. ராமச்சந்திரன் குழுவினர். |
| மாலை | 3-30 | சுபாஷிணி பார்த்தசாரதி குழுவினர். |
| | 6-00 | M. L. வசந்தகுமாரி குழுவினர். |
| | | 24-12-84 |
| மாலை | 6-00 | மதுரை T. N. சேஷகோபாலன் குழுவினர். |
| | | 25-12-84 |
| காலை | 9-00 | N. ரமணி R. தியாகராஜன்—வீணை. |
| மாலை | 3-30 | ராஜ்குமார் பாரதி குழுவினர். |
| | 6-00 | சிறுவன் U. சீனிவாஸ் மேன்டலின். |
| | | 26-12-84 |
| மாலை | 6-00 | T. V. சங்கரநாராயணன் குழுவினர். |
| | | 27-12 84 |
| மாலை | 6-00 | D. K. ஜெயராமன் குழுவினர். |
| | | 28-12-84 |
| மாலை | 6-00 | சிறுவன் சங்கரன் நம்பூதிரி குழுவினர். |
| | | 29-12-84 |
| மாலை | 3-30 | கோமதி பாலசுப்ரமணியம்—வீணை. |
| | 6-00 | Prof. T. N. கிருஷ்ணன் குழுவினர் வயலின் |
| | | 30-12-84 |
| காலை | 9-00 | பம்பாய் சகோதரிகள் குழுவினர். |
| மாலை | 3-30 | பத்மா குழுவினர். |
| | 6-00 | K. J. ஜேசுதாஸ் குழுவினர். |
| | | 31-12-84 |
| மாலை | 6-00 | சித்ரா விஸ்வேசுவரன்—நடனம். |

# ஸ்ரீ தியாகபிரம்ம கான சபா

''வாணிமகால்'', தி.நகர், சென்னை-17

## இயல் இசை நாடக விழா 1984-85

**தினசரி மாலை 6-30 மணிக்கு**

| | | | |
|---|---|---|---|
| **84 டிசம்பர்** | 20 | குமாரி நந்தினிவரதன் (திருமதி இந்திரா ராஜன் மாணவி) | நடனம் |
| ,, | 21 | சிறுவன் சங்கரன் நம்பூதிரிபாடு | குழுவினர் |
| ,, | 22 | 'டெனன்ட் கமான்மென்ட்ஸ்' (S. V. சேகர்) | நாடகம் |
| ,, | 23 | பத்மா சுப்ரமணியம் | நடனம் |
| ,, | 24 | குமாரி ஷோபா நாயுடு | குச்சிபிடி நடனம் |
| ,, | 25 | 'யாருக்கும் வெட்கமில்லை' (சோ) | நாடகம் |
| ,, | 26 | கும்பகர்ணன் (R. S. மனோகர்) | நாடகம் |
| ,, | 27 | மேன்டலின் U. ஸ்ரீ நிவாசு | குழுவினர் |
| ,, | 28 | K. J. ஜேசுதாஸ் | ,, |
| ,, | 29 | மகாராஜபுரம் சந்தானம் | ,, |
| ,, | 30 | ஹேமமாலினி | நடனம் |
| ,, | 31 | மதுரை T. N. சேஷகோபாலன் | குழுவினர் |
| **85 ஜனவரி** | 1 | சன்ஜுக்தா பாணிக்ரகி | ஒடிசி நடனம் |
| | 2 | குமாரி பிரியதர்சினி கோபாலன் (S. K. ராசரத்னம் மாணவி) | நடனம் |

## இசை வாணர்களுக்கு மருத்துவ நிதி!

### 'மாதங்கி' திரட்டுகின்றது!

இசைக்கலை வளர்ச்சிக்கென்றே துவக்கப்பெற்ற மாதங்கி சபை தனது முதலாண்டு விழாவினை 'நாதோற்சவம் 84' என்ற பெயரில் டிசம்பர் 11 முதல் 19 வரை சென்னை மயிலை சீனுவாச கூடத்தில் நடத்துகின்றது. Y. G. துரைசாமி விழாவினைத் துவக்கிவைக்கின்றார். இந்த உத்சவத்தின் மூலம் இசை வாணர்களுக்கென்று மருத்துவ நிதியும் வசூல் செய்து நோயுற்ற கலைஞர்களுக்கு உதவ மாதங்கி சபை திட்டமிட்டுள்ளது. இதற்கு வேறு சமூக சேவை நிலையங்களும் உதவ வேண்டுகோள் விடுத்துள்ளது.

விழாவில் தினசரி மாலை 6 மணிக்கு நடைபெறும் இசையரங்கத்தில் முறையே T. V. சங்கரநாராயணன், மதுரை N. கிருஷ்ணன் குளிக்கரை விசுவலிங்கம்-திருவாரூர் சேதுராமன், திருச்சூர் V. இராமச்சந்திரன், சுதா ரகுநாதன், மணி கிருஷ்ணசாமி, மதுரை G. S. மணி, P. S. நாராயணசாமி, புல்லாங்குழல் N. ரமணி ஆகியோர் தக்க துணைக்கருவியாளர்களுடன் இசை நிகழ்ச்சிகள் நடத்துகின்றனர். விழா ஏற்பாடுகளை வயலின் கலைஞர் V. V. சுப்ரமணியம் செய்துள்ளார்.

| | | |
|---|---|---|
| | | 1-1-85 |
| காலை | 9-00 | லால்குடி G. ஜெயராமன் G. J. R. கிருஷ்ணன் பிடில். |
| மாலை | 3-30 | K. M. ரேகி குழுவினர். |
| | 6-00 | மகாராஜபுரம் V. சந்தானம் குழுவினர். |
| | | 2-1-85 |
| மாலை | 6-00 | மஞ்சுளா நரசிம்மன்—நடனம். (சுதாராணி ரகுபதி மாணவி) |

# மியூசிக் அகடமி

சென்னை



## 58-வது ஆண்டு மாநாடும்

கலை நிகழ்ச்சிகளும்

இடம்: டி. டி. கிருஷ்ணமாச்சாரி அரங்கம்
டி. டி. கே. சாலை, இராயபேட்டை.

### 19-12-84

| | | |
|---|---|---|
| மாலை | 4-00 | துவக்கம் : அண்ணாமலை பல்கலைக்கழக இணைவேந்தர் டாக்டர் M. A. M. இராமசாமி<br>தலைமை : டாக்டர் மைசூர் V. துரைசாமி அய்யங்கார் |
| | 5-00 | ஸ்ரீநிதி ரங்கராஜன்—பரதநாட்டியம். |
| இரவு | 8-00 | ஷேக் சின்ன மவுலானா—நாகசுரம்.<br>வலங்கைமான் சண்முகசுந்தரம்—தனித்தவில். |

### 20-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | கல்யாணி பஞ்சாபகேசன் குழுவினர். |
| | 2-30 | முத்து சுப்ரமண்யம் குழுவினர். |
| மாலை | 5-00 | T. M. தியாகராஜன் குழுவினர். |
| இரவு | 8-00 | லட்சுமி விஸ்வநாதன்—பரதநாட்டியம். |

### 21-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | நெய்வேலி சந்தான கோபாலன் குழுவினர். |
| | 2-30 | வனஜா ராகவன் குழுவினர். |
| மாலை | 5-00 | அய்யலூர் கிருஷ்ணன் குழுவினர். |
| இரவு | 8-00 | V. ராமச்சந்திரன் குழுவினர். |

### 22-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | விஜயா சிவா குழுவினர். |
| | 2-30 | C. கிருஷ்ணமூர்த்தி—வீணை. |
| மாலை | 5-00 | மணி கிருஷ்ணசாமி குழுவினர். |
| இரவு | 8-00 | ஷோபா நாயுடு—குச்சிப்புடி நடனம். |

### 23-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சாந்திராவ்—வீணை. |
| | 2-30 | ராமாரவி குழுவினர். |
| மாலை | 5-00 | K. J. ஜேசுதாஸ் குழுவினர். |
| இரவு | 8-00 | T. K. கோவிந்தராவ் குழுவினர். |

### 24-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சுகன்யா பிரபாகர் குழுவினர். |
| | 2-30 | திருவாரூர் சேதுராமன் குளிக்கரை பிச்சுமணி குழுவினர். |
| மாலை | 5-00 | U. சீனிவாசு மாண்டலின். |
| இரவு | 8-00 | T. R. சுப்ரமண்யம் குழுவினர். |

### 25-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சுகுமாரி நரேந்திர மேனன் குழுவினர். |
| | 2-30 | சாருமதி ராமச்சந்திரன் குழுவினர். |
| மாலை | 5-00 | D. K. ஜெயராமன் குழுவினர். |
| இரவு | 8-00 | S. ராமநாதன் குழுவினர். |

### 26-12:84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | வனஜா நாராயணன் குழுவினர். |
| | 2-30 | பாலை C. K. ராமச்சந்திரன் குழுவினர். |
| மாலை | 5-00 | சிக்கல் குஞ்சுமணி நீலா குழுவினர்—வீணை |
| இரவு | 8-00 | M. L. வசந்தகுமாரி குழுவினர். |

### 27-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சௌமியா மதனகோபால் இந்துஸ்தான இசை. |
| | 2-30 | ரவிகிரன் கோட்டு வாத்தியம். |
| மாலை | 5-00 | மகாராஜபுரம் சந்தானம் குழுவினர். |
| இரவு | 8-00 | D. K. பட்டம்மாள் குழுவினர். |

### 28-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சுபஸ்ரீ மணி குழுவினர். |
| | 2-30 | ரீட்டா ராஜன் குழுவினர். |
| மாலை | 5-00 | T. N. ஷேச கோபாலன் குழுவினர். |
| இரவு | 8-00 | V. துரைசாமி ஐயங்கார், D. பாலகிருஷ்ணா வீணை. |

### 29-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சுசிலா ராமன் குழுவினர். |
| | 2-30 | சகுந்தலா நரசிம்மன் இந்துஸ்தானி இசை. |
| மாலை | 5-00 | T. V. சங்கரநாராயணன் குழுவினர். |
| இரவு | 8-00 | N. ரமணி—புல்லாங்குழல். |

### 30-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | T. N. ரவிபிரசாத் குழுவினர். |
| | 2-30 | சங்கரன் நம்பூதிரி குழுவினர். |
| மாலை | 5-00 | சித்ரா விஸ்வேஸ்வரன்—பரதநாட்டியம். |
| இரவு | 8-00 | நேதனூரி கிருஷ்ணமூர்த்தி குழுவினர். |

### 31-12-84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | பத்மஜா சீனிவாசன் குழுவினர். |
| | 2-30 | ஜெயாகிருஷ்ணன் குழுவினர். |
| மாலை | 5-00 | பம்பாய் சகோதரிகள் குழுவினர். |
| இரவு | 8-00 | R. வேதவல்லி குழுவினர். |

### 1-1-85

| | | |
|---|---|---|
| பகல் | 1-30 | பேராசிரியர் மோகன் சந்தர் குழுவினர் |
| மாலை | 4-00 | சதஸ். டாக்டர் M. S. சுப்புலட்சுமி தலைமை |
| | 6-00 | கதக்களி நாட்டிய நாடகம். |

### 1-2-85

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | V. தேசிகாச்சாரி புல்லாங்குழல் |
| மாலை | 5-00 | பத்மா சுப்ரமண்யம் நடனம் |
| | 6-00 | லட்சுமி சங்கர் இந்துஸ்தானி இசை |

கலைத் தொடர் கதை

# ஆடலரசி அபிராமி

## முன்னுரையும் முன் கதைச்சுருக்கமும்

இது ஒரு புதுமையான கலைத்தொடர் கதை. கதை கொஞ்சம் தான் இருக்கும். கலை, கலைஞர்கள் சம்பந்தப்பட்ட கருத்துக்கள் செய்திகள் அதிகம் இருக்கும். இக்கதை இன்றைக்கு கிட்டத்தட்ட 75 ஆண்டுகளுக்கு முன்னர் தமிழகத்தில் குறிப்பாக தஞ்சை மாவட்டத்தில் சில கலைக் குடும்பங்களில் நிகழ்ந்ததாக எழுதப் படும் கதை இதில் பல உண்மைச் சம்பவங்களும் வரலாம். சம்பவங் களில் சம்பந்தப்பட்ட அனைவரும் இன்று இல்லை என்றாலும் புனைப்பெயர்களே வழங்கப்படும். அவர்களது புகழுக்கும் எவ்வித களங்கம் கற்பிக்கப்படமாட்டாது.

கதை நிகழும் காலத்தில் சினிமா கிடையாது. நாடகமும் கூத்து பாணியாக இருக்கும். அந்தக்காலத்தில் பரதநாட்டியக் கச்சேரிசின்ன மேளக்கச்சேரி என்றும் நாதசுரக் கச்சேரி பெரிய மேள கச்சேரி என்றும் சொல்வார்கள். ஒலி பெருக்கி வராததால் வாய்ப் பாட்டு கச்சேரி தற்போது உள்ளது போல பிரபலமாக இல்லை. சின்ன மேளத்தில் 'தேவதாசி' குலப்பெண்களே நடன மாடுவார்கள் பிற பெண்கள் ஆடமாட்டார்கள்.

இன்று திரைப்பட நட்சத்திரங்களுக்கு இருக்கும் பெரும் புகழும் நாதசுர நடனக் கலைஞர்களுக்குத்தான் அன்று உண்டு. மக்களுக்கும் முக்கிய பொழுது போக்கு கலை நிகழ்ச்சிகள் தான். திருமுறை இசை, கதா காலட்சேபங்களும் உண்டு.

பந்தனை நல்லூர் பங்கஜம் என்ற பழைய நடனக்காரியின் ஒரே மகள் அபிராமி. இவள் தனது தாயின் குருநாதரான நடன மேதை குத்தாலம் கணபதி பிள்ளையிடம் பரதம் பயின்று பதினெட்டு வயதில் அரங்கேறினாள். கவர்ச்சியான அழகும் நல்ல கலைத்திறனும் இருந்ததால் அவளது புகழ் தஞ்சை மாவட்டம் முழுவதும் பரவியது. புதுகோட்டை இளையராஜா ஓர் கலாரசிகர் தஞ்சாவூர் அடுத்தமாரியம்மன் கோவிலுக்கு வந்த போது அபிராமி சதுரினைக்கண்டு அவள் மீது ஆவல் கொண்டு பழக ஆரம்பித்தார். அழகு புகழ் இவற்றுடன் பெரிய இடத்து ஆதரவும் ஏற்பட அவளுக்கு கர்வமும் வளர ஆரம்பித்தது.

குத்தாலம் பாப்பா நடுவயது நடனமாது எனினும் அவளது இளமைத் தோற்றத்தாலும் அனுபவமான சதுர் ஆட்டத்தாலும் ஏராள கச்சேரிகள் செய்துகொண்டு பல பெரிய மனிதர்கள் நட்பு பெற்றிருந்தாள் அபிராமியின் வளர்ச்சி அவளைப் பாதித்தாலும் பாப்பா அதனால் பொறாமை கொள்ளாது இருந்தாள். மாறாக தனது ஒரே மகனான மகாராசாவுக்கு எப்படியேனும் அவளைத் திருமணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று அந்தரங்க ஆசை வைத்திருந்தாள் தோற்றத்தில் மட்டும் மகாராசா போல் இருந்த அவனோ பாப்பாவின் மகன் என்ற தகுதி தவிர வேறு தகுதி யில்லாமல் வளர்ந்திருந்தான்.

தஞ்சாவூர் பஞ்சாட்சர பாகவதர் நல்ல ஞானஸ்தர். அழகாக கதாகாலட்சேபம் செய்வார் இவருக்கு தெரியாத கலைஞர்களே கிடையாது. ஆனால் அதிர்ஷ்ட கட்டை வித்தைக்கு ஏற்ற விலாசம் கிடையாது. பங்கஜம், பாப்பா இருவர் குடும்பத்துக்கும் வேண்டிய வர். இவரது கும்பகோணம் நண்பர்கள் சுப்புணி, சமையல்வேலை செய்பவர், குளத்துமணி கோயில் குருக்கள் இருவரும் நல்ல ரசிகர்கள்.

மாசி மகா விழாவிற்கு சதுராட பாப்பா குழுவினரும், அபிராமி கணபதி பிள்ளை குழுவினரும், கும்பகோணம் வந்திருந் தனர். அபிராமி குழுவினர் கும்பகோணத்தில் புதுக்கோட்டை ராசாவுக்கு சொந்தமான மாளிகை ஒன்றில் இளையராஜா விருந் தினராக தங்கினர். அப்பொது இளையராஜாவுடன் ஏற்பட்ட ஊடலைத் தீர்க்கும் நோக்குடன் மாளிகைக் கூடத்தில் அபிராமி சிம்ம நந்தன அரங்கேற்றம் செய்தாள். இந்த செய்தி நகரெங்கும் பரவியது. முதல் நாள் ஆடிவிட்டு தங்கியிருந்த பாப்பாவிற்கும் எட்டியது.

மறுநாள் இரண்டு நடனக்குழுக்களும் கும்பகோணம் ரயிலடி யில் சந்தித்துக்கொண்டனர். பாப்பாவைப்பற்றி பலவும் அபிராமி கேள்விப்பட்டிருந்ததால் தன்னை வழியனுப்பவந்த இளையராஜா பாப்பாவை சந்திப்பதையே அவள் தவிர்க்க விரும்பினாள் ஆனால் பாப்பாவோ எதிர் வந்து அபிராமியை நலம் விசாரித்து அவளது சிம்ம நந்தனம் நாட்டியம் பற்றி புகழ்ந்து பேசினாள்.

தஞ்சாவூர் சுந்தரம் பிள்ளை பரம்பரை மேளக்காரர் தஞ்சா வூரை யடுத்து கருந்தட்டான்குடி என்ற ஊரில் தனது மனைவி பாக்யத்தம்மாளுடன் வசித்து வந்தவர். இவர் பிரபலமான நாத ..ரக்காரர் இல்லையென்றாலும் பிரபலமான கலைஞர்கள் அனை ..ரும் மதிக்கும் அளவிக்கு ஞானஸ்தராக இருந்தார். இவரது மூத்த மகன்தான் நமது கதாநாயகன் சுவாமிநாதன் பிள்ளைக்கு மகன் மீது மிகுந்த அன்பு உண்டு; அதைவிட அவன்பெரிய இசைக் கலைஞனாக வரவேண்டும் என்ற ஆசை உண்டு. அதே ஊரில் வாழ்ந்த பழைய நாட்டியக்காரி நவநீதம் பிள்ளையிடம் தொடர் பும், சுவாமிநாதனிடம் பாசமும் வைத்திருந்தாள். வாரிசு இல்லாத அவள் தனது கொஞ்சம் சொத்துக்களை அவன் பெயரில் எழுதி வைத்திருந்தாள். என்றாலும் பிள்ளையவர்களுக்கு பயந்து அவனிடம் பேச கூடமாட்டாள்.

திருவையாறு இராஜகோபால் பாகவதர் ஓர் வைணவ அந்தணர். கம்பீரமான தோற்றமும் எடுப்பான குரலும் கொண்ட வர். அவருக்கு அநேக வாகக்கேயக்காரர்கள் (பாடலாசிரியர்) பாடல் கள் தெரியும். எனினும் தியாகராச சுவாமிகள் கீர்த்தனங்கள் ஏராள பாடம் உள்ளவர் தியாகப்பிரம்மம் மீது மிகுந்த பக்தி உடையவர். நிறைய சீடர்கள் உண்டு. கச்சேரி செய்து கொண்டு இருப்பவர்கள் கூட இவரிடம் புதுகீர்த்தனைகள் கற்றுக்கொள்ள வருவார்கள். திருவையாற்றில் சொந்த வீடு, வேண்டிய நிலம் உண்டு. தொழிலுக்காக எவரிடமும் பணிந்து செல்ல மாட்டார். நேர்மையை விரும்புபவர். தனது நிலத்தருகே உள்ள சோலையில் அமர்ந்து பண்ணையாட்களைக் கவனித்துக் கொண்டே சீடர் களுக்கும் பாடம் சொல்லி கொடுப்பார். அப்பொழுது சிறிது கள் சாப்பிடுவார்.

இவரிடம் ஏராள மாணவர்கள் குருகுலவாசம் செய்து கீர்த் தனங்கள் கற்றுக்கொள்வதுண்டு தஞ்சாவூர் நாதசுரக்காரர் சுந்தரம் பிள்ளை மூத்தமன் சுவாமிநாதன் அழகான தோற்றமும். இனிமையான குரலும் உடையஇளைஞன் தந்தையிடம் சிறு வயது முதல் இசைகற்று ஞானமாக பாடக்கூடியவன். அவனும் இராஜ கோபால் பாகவதர் வீட்டுக்கு வந்துதங்கி கீர்த்தனங்கள் கற்று செல்வதுண்டு பாகவதருக்கு இவன் மீது தனி பற்று உண்டு அவன் அவ்வாறு அங்கு வந்திருந்த வேளையில் கும்பகோணம் மாசிமக விழாவிற்கு வந்து திரும்பிய தஞ்சாவூர் பஞ்சாட்சர பாகவதர் திருவையாறு வந்து இராஜகோபால் பாகவதரைச்சந்தித்தார். தான் மாசி மகம் சென்ற விபரங்களைச்சொல்லி அபிராமியின் சிம்மநந்தன அரங்கேற்றம் பற்றி கூறினார், அபிராமி பற்றி வர்ணித்தார் அவ்வார்த்தைகள் சுவாமிநாதன் மனதில் பதிந்தன கலைத்தேவியைத்தவிர வேறு எந்தத்தேவியையும் காண விரும் பாத அவனுக்கு அபிராமி தேவியை காண ஆவல் வந்தது.

இதுதான் இதுவரை வந்த மூலக்கதை. எனினும் இடையில் பல கலைஞர்களின் குட்டிக்கதைகள் வந்துள்ளன. அதனை பழைய இதழ்களில் தான் படிக்கவேண்டும்.

(தொடரும்)

# வழுவூரார் நடன விழா
# 1984 - 85

ரசிகரஞ்சனி சபை கூடம், மயிலை. சென்னை-4

டிசம்பர் 84

24-12-84

| | |
|---|---|
| மாலை 5-00 | கோட்டூர் சகோதரர்கள்—நாதசுரம் |
| 7-30 | செல்விகள் ரஜு, சுனிதா—நடனம் |
| 9-30 | மதுரை M, P, N. சேதுராமன் M. P. N. பொன்னுசாமி—நாதசுரம் |

25-12-84

| | |
|---|---|
| 5-00 | A. கஜேந்திரன் குழுவினர் |
| 7-30 | குமாரி ஜெயந்தா ஸ்ரீராஜாராம்—நடனம் |
| 9-30 | மதுரை T. N. சேஷகோபாலன் குழுவினர் |

26-12-84

| | |
|---|---|
| 5-00 | பாரதிகண்ட பாரதம்—நாட்டிய நாடகம் |
| 7-30 | ஹைதராபாத் குமாரி ரத்னா—நடனம் |
| 9-30 | D. K. ஜெயராமன்—தாளவாத்திய கச்சேரி |

27-12-84

| | |
|---|---|
| 5-00 | செல்வி சாலினி—நடனம் |
| 7-30 | குமாரிகள் சத்யா, சாந்தி—நடனம் |
| 9-30 | சிறுவர்கள் R. கணேஷ், R. குமரேஷ்— இரு வயலின் |

28-12-84

| | |
|---|---|
| 5-00 | குமாரி பார்கும் சுப்ரமணியம்—நடனம் |
| 7-30 | டாக்டர் சீர்காழி கோவிந்தராசன் குழுவினர் |
| 9-30 | அகிலா தெரசா (கேமரூன் ஆப்ரிகா)—நடனம் |

29-12-84

| | |
|---|---|
| 5-00 | செல்வி மகாலட்சுமி காமேசுவரன்—நடனம் |
| 7-30 | ஹைதராபாத் குமாரி சானா—நடனம் |
| 9-30 | G. S. மணி—குழுவினர் |

30-12-84

| | |
|---|---|
| 5-00 | விஜயஸ்ரீ பாலசுப்ரமணியம்—நடனம் |
| 7-30 | கோவை சகோதரிகள்—நடனம் |
| 9-30 | திருமதி மணி கிருஷ்ணசாமி—குழுவினர் |

31-12-84

| | |
|---|---|
| 5-00 | T. K. S. கலைவாணன்—குழுவினர் |
| 7-30 | வழுவூர் குருகுலம் மாணவிகள்—நடனம் |
| 9-30 | திருப்பாம்புரம் T.K S. சகோதரர்கள் நாதசுரம். |

ஜனவரி 85

1-1-85

| | |
|---|---|
| 5-00 | செல்வி C. K. வனிதா—நடனம் |
| 7-30 | குமாரி ஜெயந்தி இராசகோபால்—நடனம் |
| 9-30 | டாக்டர் மதுரை S. சோமசுந்தரம் குழுவினர் |

## கல்லூரி முதல்வர் கலையிலும் வல்லவர் !

சென்னை அரசு இசைக் கல்லூரி முதல்வராகப் பணியாற்றும் வயலின் இசை வித்தகர் பேராசிரியர் T. N. கிருஷ்ணனுக்கு இவ்வருடம் மயிலை பைன் ஆர்ட்ஸ் கிளப் இசை விழாவில் 'சங்கீத கலாநிபுணர்' பட்டம் வழங்குகின்றனர்.



இசை உலகில் ஓர் விதி உண்டு நல்ல இசை ஆசிரியர் சிறந்த மேடைக் கலைஞராக இருப்பதில்லை. ஆனால் ProF T. N. கிருஷ்ணன் அவர்கள் அதற்கு விதி விலக்கு ஏராள சிறந்த மாணவர்கள் இவருக்குண்டு.

1928-ல் A. நாராயண அய்யருக்கு மகனாகப் பிறந்த இவர் சிறுவயது முதலே தனது தந்தையாரிடமும் பின்னர் செம்மங்குடி சீனுவாச அய்யரிடமும் இசைக் கலைக் கற்று பிரபல இசைக் கலைஞர்கள் அனைவருக்கும் வயலின் வாசிக்க ஆரம்பித்தார். பின்னர் பல தனி Solo கச்சேரிகள் செய்தார். தற்பொழுது தனது மகள் விஜி நாராயணன், ஸ்ரீ ராமகிருஷ்ணன் இவர்களுடன் வயலின் கச்சேரிகள் செய்து வருகின்றார். வயலின் கலை தவிர வாய்ப்பாட்டு, புல்லாங்குழலும் இவருக்குத் தெரியும்.

1974-75 இரண்டு வருடங்கள் அமெரிக்க பெர்கிர்லி என்ற ஊரில் உள்ள உலக இசை மையத்தில் பேராசிரியராகப் பணியாற்றினார். பல முறை வெளிநாடுகள் சென்று நிகழ்ச்சிகள் நடத்தினார். மியூசிக் அகடமி நிபுணர் குழு உறுப்பினர், மற்றும் பல அரசு குழுக்களில் உறுப்பினராகப் பணியாற்றும் இவரை திருப்பதி திருமலை தேவஸ்தானம்தங்கள் ஆஸ்தான கலைஞராகக் கொண்டுள்ளது.

இவர் பெற்ற விருதுகள். இந்திய அரசின் 'பத்மஸ்ரீ' சங்கீத நாடக அகடமி விருது-1975 மியூசிக் அகடமியின் 'சங்கீத கலாநிதி' பெங்களூர் செளடைய்யா விருது மற்றும் பல.

## மாதம் முழுதும் இசை விழா

சென்னை வண்ணாரப் பேட்டையில் உள்ள தெய்வத் தமிழ் மன்றம் புதுமையான முறையில் ஓர் இசை விழா நடத்துகின்றது. இந்த விழாவில் மார்கழி மாதம் 29 நாட்களும் 16-12-84 முதல் 13-1-85 வரை தினசரி காலை 6 மணி முதல் 7-30 மணி வரை இசை நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர்.

முதல் நாள் தொடக்க விழாவில் குமரகிரி டெக்ஸ்டைல்ஸ் அதிபர் திரு P. M. பிச்சைசெட்டியார், தலைமையில் N. R. வீரஜின்னுசெட்டியார், அரு. சங்கர் B.Sc ஆகியோர் உரையாற்றுகின்றனர்.

இசை நிகழ்ச்சிகளில் P. K. ஞானம் சகோதரிகள், T. சொக்கலிங்கம், சியாமளா குமார், தண்டையார் பேட்டை பாலு, சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் தருமபுரம் P. சுவாமிநாதன், T. K. S. கலைவாணன், K. ஜனார்த்தனம், வி. சம்பந்தமூர்த்தி, நடராஜன், M. N. வேங்கடவரதன், B. J. மாதவன், காளீஸ்வரி வைரவன், பத்மாசினி விஸ்வநாதன், செல்வி பத்மா, சோஷாத்திரி, லால்குடி M. சுவாமிநாதன், புதுக் கோட்டை சீனிவாசன், தருமபுரம் S. ஞானப்பிரகாசம், புலவர் பா. ஆழ்வார், புரசை E. அருணகிரி, குடந்தை V, லட்சுமணன், கிருஷ்ணமூர்த்தி, ராஜாராம் ஆகியோரும் இறை பணி அன்பர்கள், பலரும் கலந்து பாடுகின்றனர்.

இவர்களுக்கு துணையாக வயலின் M. கோவிந்தசாமி, மிருதங்கம் S. யுவராஜ் ஆர்மோனியம் S. சிட்டிபாபு, ஆகியோர் தினசரி வாசிப்பர். பழைய வண்ணை பேரம்பாலு தெரு அருள்மிகு கோதண்ட ராமர் கோயில் மண்டபத்தில் நிகழ்ச்சிகள் நடைபெறும்.

ந. இராமநாதன்,
18, மேலத் பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை - 28




TN/MS(S)/260
IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers Kavarai Street, Vadapalani Madras-26. Published / Edited by M. Lakshmi, 57, South Sivan Koil Street, Kodambakkam MADRAS-600 024.

# ஸ்ரீ கிருஷ்ண கான சபா



**கான விஹார், கிரிபித் சாலை, தி. நகர், சென்னை - 17.**

## 29-ஆண்டு கலை விழா, நாட்டிய மாநாடு

**84 டிசம்பர்**

### 15-12-84

மாலை 5-00 திருமதி **மீருணாளினி சாராபாய்** (அகமதாபாத்) அவர்கள் துவக்கி ஒடிசி நடன கலைஞர் திருமதி **சோனல் மான்சிங்** அவர்களுக்கு 'நிருத்ய ஜோதி' விருதினை வழங்குவர். முன்னாள் இந்திய அரசு நிதி அமைச்சர் திரு. C. **சுப்பிரமணியம்** அவர்கள் லட்சுமி விசுவநாதன் எழுதிய 'பரத நாட்டியம் தமிழ் பழங்கலை' என்ற புத்தகத்தினை வெளியிடுவார்.

6-00 K. ஜெயலட்சுமி—நடனம்
8-00 ஷேக் சின்ன மவுலானா சாகிப்—நாதசுரம்
வலையபட்டி சுப்ரமணியம்—தவுல்

### 16-12-84

5-00 M. S. கோபாலகிருஷ்ணன்,
M. G. நர்மதா குழுவினர்—இரு வயலின்
8-00 சோனல் மான்சிங்—ஒடிசி நடனம்

### 17-12-84

5-00 மணி கிருஷ்ணசாமி—குழுவினர்
8-00 சுதாராணி ரகுபதி—நடனம்

### 18-12-84

5-00 டாக்டர் S. இராமநாதன்—குழுவினர்
8-00 S. கனகா—நடனம்

### 19-20-84

5-00 சிக்கில் சகோதரிகள்—புல்லாங்குழல்
8-00 அலர்மேல் வள்ளி—நடனம்

### 20-12-84

5-00 T. V. சங்கநாராயணன் குழுவினர்
8-00 'பராசக்தி'—நடன நாடகம்

### 21-12-84

5-00 R. வேதவல்லி குழுவினர்
8-00 பண்டிட் சிவகுமார் சர்மா—சந்தூர் இசைகருவி இசை

### 22-12-84

5-00 மாண்டலின் V. சீனு வாசு குழுவினர்
8-00 கலாமண்டலம் சேமாவதி—மோகினி ஆட்டம்

### 23-12-84

5-00 மதுரை T. N. சேஷகோபாலன் குழுவினர்
8-00 ராஜா, ராதாரெட்டி கௌசல்யா—குச்சிபிடி நடனம்

### 24-12-84

5-00 மகாராஜபுரம் சந்தானம் குழுவினர்
8-00 கீதாஞ்சலி—கதக் நடனம்

### 25-12-84

காலை 8-30 டாக்டர் M. L. வஸந்தகுமாரி குழுவினர்
மாலை 5-00 லால்குடி ஜெயராமன், G. J. R. கிருஷ்ணன்—இரு வயலின்
8-00 சித்ரா விஸ்வேசுவரன்—நடனம்

### 26-12-84

5-00 டாக்டர் N. ரமணி—புல்லாங்குழல்
8-00 லட்சுமி விசுவநாதன்—நடனம்

### 27-12-84

6-30 'கும்பகர்ணன்' (R. S. மனோகர்)—நாடகம்

### 28-12-84

5-00 பம்பாய் சகோதரிகள்
8-00 'மேகசந்தேசம்'—சமஸ்கிருத நாட்டிய நாடகம்

### 29-12-84

காலை 8-30 ரங்கநாயகி இராசகோபாலன்—வீணை
மாலை 5-00 நேதநூரி கிருஷ்ணமூர்த்தி குழுவினர்
8-00 மாளவிகா சருக்கை நடனம்

### 30-12-84

காலை 8-30 ரவிகிரன்—கோட்டுவாத்யம்
மாலை 5-00 DK. ஜெயராமன் குழுவினர்
8-00 'கல்யாண ருக்குமணி'—தெலுங்கு நாட்டிய நாடகம்

### 31-12-84

5-00 V. இராமச்சந்திரன் குழுவினர்
8-00 பண்டிட் பீமசென் ஜோசி—இந்துஸ்தானி இசை

**ஜனவரி 85**

### 1-1-85

காலை 8-30 சங்கரன் நம்பூதிரி குழுவினர்
மாலை 5-30 டாக்டர் பதமா சுபரமணியம்—நடனம்
8-00 நிர்மலா ராமச்சந்திரன் ,,

ஜனவரி 9 முதல் 20 தேதி வரை பொங்கல் நடனவிழா

---

## கலைஞர்களே! ரசிகர்களே!

இந்த இதழ் மூன்றாவது ஆண்டாக வெளிவரும் இசை விழா சிறப்பிதழ். இவ்வாண்டு இதனைப் புத்தக வடிவில் சென்னை இசை விழா நிகழ்ச்சிகள் முழு விபரம், காலை நடைபெறும் இசையாராய்ச்சி கூட்டங்கள் விபரம் இவற்றுடன் வெளியிட இருந்தோம். ஆனால் பொதுத்தேர்தல் அறிவிக்கப்பட்டதால் அச்சகங்களுக்கு ஏராள வேலை. எனவே வழக்கப்படி இசை விழா நிகழ்ச்சி குறிப்புகள், விருது பெரும் கலைஞர்கள் வாழ்க்கைக் குறிப்புகள் இவற்றுடன் வெளியிட்டுள்ளோம்.

இசைத்தட்டு இசைச்சுட்டி நிறுவனங்கள் விளம்பரங்கள் பல வந்தும் இடநெருக்கடி காரணமாக வெளியிடவில்லை. இயலிசை மூன்றாம் ஆண்டு நிறைவு விழா மலர் ஏப்ரல் 85ல் வெளிவர உள்ளது, அவற்றில் அவை இடம் பெறும். இவ்விதழில் பல கலை உலகச் செய்திகள் இடம் பெற வில்லை அவை அடுத்த இதழில் இடம் பெறும்.

இசை நிகழ்ச்சிகளில் 'குழுவினர்' என்று மட்டும் குறிப்பிட்டிருந்தால் வாய்ப்பாட்டு கச்சேரி என்று கொள்ளவும். நடனம் என்று குறிப்பிட்டிருந்தால் பரத நாட்டியம் என்று கொள்ளவும்.



தாங்கள் தொடர்ந்து ஆதரவு அளிக்க வேண்டுகின்றேன். சந்தா, நன்கொடைகள் செய்திகள் அனுப்பிவைத்து இயலிசையை ஆதரிக்க வேண்டுகின்றேன்.

—சிறப்பு ஆசிரியர்